உ

முருகக்கடவுள் துணை.

தென்பேறு - புதுப்பாளையம்

# தோத்திரத்திரட்டு.

---

இவை

மகான் - வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள் — முருகதாச சுவாமிகள்

என வழங்கும்

**ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகள் அருளிச்செய்தது.**

---

தெ - புதுப்பாளையம்

**கலைமகள் கழகத்தின்**

**இரண்டாவது ஆண்டு விழாவில்**

**திருவாளர்-தில்லை. கு. சி. பழனியாண்டி முதலியார் அவர்கள்**

பொருளுதவிகொண்டு வெளியிடப்பட்டது.

விய௵ ஆனி௴ 29௳

1946.

குருவே துணை.

# முகவுரை.

---

இந்தப் புத்தகத்தினிடத்து, தெ. புதுப்பாளையம் என்னும் பதியில் விளங்கும் முருகக்கடவுள் பதிகம் ஒன்றும், திருப்புகழ் மூன்றும், தென்பேறு என்னும் பதியில் விளங்கும் சிவன் பதிகம், விஷ்ணு பதிகம் ஒவ்வொன்றும் உள்ளன.

முதற்கண் உள்ள புதுப்பாளையமானது விழுப்புரத்துக்கு வடக்கே 10 மைல் தூரத்தில் உள்ளதாகும். அங்கு திருக்கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானையே மேற்படி பதிகமும் திருப்புகழும் குறிக்கொண்டதாகும். அப்பெருமான் முத்துக்குமாரசாமி என்னும் பெயருடன் விளங்குகின்றார். பல ஆண்டுகட்குமுன் அப்பதிக்கு வடகிழக்கில் உள்ள தச்சூர் என்னும் பதிக்குச் சமீபமாகப் போகும் பாதையோரம் முருகன் ஆலயம் ஒன்றிருந்ததாயும், அருணகிரிநாதர் திருப்புகழில்— 'அச்சாயிருக்காணி' என்று துவக்கி, தச்சூர் வடக்காகு மார்க்கத்தமைந்த—பெருமாளே என முடியும் பாடல் இப்பெருமானைக் குறித்ததென்பதாயும் தெரிகிறது.

பின்—காலநிலைக்கேற்ப அவ்வாலயம் சிரணித்ததால் மூர்த்தியை இப்பதியினர் இங்கு பிரதிஷ்டை புரிந்தனரென்பதும், இப்பதியின் குளத்தைப் புதுப்பித்ததும் அவ்வாலயத்தின் கருங்கற்களைக் கொண்டே யென்பதும் கர்ன பரம்பரை வழக்கு. இப்படி மாறுதல் ஏற்படுவது ஏகதேசத்தில் பல இடங்களில் காண்கிறோம். ஆகவே அதனை மறுத்தற்கில்லை.

அதனையடுத்து வடமேற்றிசையில் உள்ளது தென்பேறு என்னும் பதி. அங்கு விளங்கும் - சிவன், விஷ்ணு என்னும் இரு மூர்த்திகளையும் குறித்தது பிந்திய இரண்டு பதிகங்களும் ஆகும். இவை சற்று ஏறக்குறைய 65 ஆண்டுகட்கு முன்பு, மஹான்-வண்ணச்சரபம் - திருப்புகழ்ச்சுவாமிகள் - முருகதாச சுவாமிகள் என வழங்கும் ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகளால் அருளிச் செய்யப்பெற்று சுவாமிகள் திருக்கரத்தாலேயே வரையப்பெற்ற ஏட்டுப்புத்தகத்தினின்றும் பெயர்த்தெழுதி இப்போது பதிக்க நேர்ந்தது.

ஷை சுவாமிகள் திருநெல்வேலியில் சுத்த சைவ வேளாள மாபில் நூற்றுஏழு ஆண்டுகட்குமுன் அவதரித்து அதி இளமைப் பருவத்திலேயே முருகன் அருளால் புதுக்கவி பாடும் தன்மைபெற்றுப் பல தலயாத்திரைசென்று ஆங்காங்கும் அமைந்துள்ள மூர்த்திகளைக் குறித்துச் சமயபேதச் சார்பிகந்த சமரச ஞானத்தால் பல துதிப்பனுவல் பாடியதன்றிச் சாத்திர சரித்திர சம்பந்தமாகவும் பல இயற்றியுள்ளனர். அம்முறையில் இப்பதிக்கு வந்தபோது இப் பதிகங்கள் இயற்றப்பெற்றது.

அக்கால், தெ. புதுப்பாளையத்தில் இருந்த நாய்க்கர் சுவாமியென்ற இராமசாமி சுவாமியென்பவரது இதோபதேசத்தால் அவ்வூரினர் அடியவர் தொண்டு முதலிய நற்குண வசத்தினராயிருந்ததாக அப்பதிகத்தில் குறிப்பிட்டிருக்கிறது.

ஷை ஆலயங்களின் தருமகர்த்தரும், ஜவுளி வர்த்தகத்தினரும், தருமசீலரும், உதாரணகுணத்தினரும் ஆகிய திருவாளர் தில்லை கு. சின்னசாமி முதலியார் குமாரர் பழனியாண்டி முதலியார் அவர்களால் ஷை தெ. புதுப்பாளையம் கலைமகள் கழகத்தின் சார்பாக, வியஹு ஆனிமீ 29, 30உ (13, 14—7—46) சனி, ஞாயிறு கிழமைகளில் ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் நடந்த இரண்டாவது ஆண்டு விழாவில் பதித்து வெளியிடப்பெற்றது. இத்தகைய புண்ணியப்பணியில் ஈடுபட்ட ஷை பழனியாண்டி முதலியார் அவர்களுக்கு ஸ்ரீ முருகப்பெருமான் இகபர சௌபாக்யமெல்லாம் தந்தருளப் பிரார்த்திக்கின்றேன். சுபம்.

இங்ஙனம்,
ஸ்ரீ தி. மு. செந்திநயக சுவாமிகளது
மகனும் மாணவருமான
தி. செ. முருகதாச பிள்ளை,
கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர்.

வியஹு ஆனிமீ உஎஉ
11-7-46.

குருவே துணை.

## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த

# திருப்புகழ்.

---

*தத்தா தனத்தான தாத்தத் தனந்த — தனதானு.*

அச்சாயிறுக்காணி காட்டிக்கடைந்த
செப்பார் முலைக்கோடு நீட்டிச்சரங்க
ளைப்போல் விழிக்கூர்மை நோக்கிக் குழைந்து — உறவாடி

அத்தானெனக்காசை கூட்டித் தயங்க
வைத்தாயெனப் பேசி மூக்கைச் சொறிந்து
அக்கா லொருக்கால மேக்கற்றிருந்தி — ரிலையாசை

வைச்சாயெடுப்பான பேச்சுக்கிடங்கள்
ஒப்பாருனக்கிடு பார்க்கிற் கடம்பன்
மட்டோ எனப்பாரின் மூர்க்கத்தனங்க — ளதனாலே

மைப்பாகெனக்கூறி வீட்டிற்கொணர்ந்து
புற்பாயலிற்காலம் வீற்றுக்கலந்து
வைப்பார் தமக்காசை யாற்பித்தனைந்து — திரிவேனோ

எச்சாய்மருட்பாடு மேற்பட்டிருந்த
பிச்சாசருக்கோதி கோட்டைக்கிணங்க
மிக்கா நினைப்போர்கள் வீக்கிற்பொருந்தி — நிலையாயே

எட்டாமெழுத்தேழை யேற்குப்பகர்ந்த
முத்தாவலுப்பான போர்க்குட்டொடங்கி
யெக்காலுமக்காதசூர்க் கொத்தரிந்த — சினவேலா

தச்சாமயிற்சேவ லாக்கிப்பிளந்த
சித்தாகுறப்பாவை தாட்குட்படிந்து
சக்காகியப்பேடை யாட்குப்புகுந்து — மணமாகித்

தப்பாமலிப்பூர்வ மேற்குத்தரங்கள்
தெற்காகுமிப்பாரில் கீர்த்திக்கிசைந்த
தச்சூர்வடக்காகு மார்க்கத்தமர்ந்த — பெருமாளே.

குருவே துணை.

# பதிப்புப் பாயிரம்.

---

செங்கமலத் தடவாவி திகழ் புதுப்பாளைய நகர்வாழ்
துங்கவடி வேற்குகன்மேற் றாயதிருநெல்லைவரு
பங்கமறு தமிழ்த்தண்ட பாணிமுனி வானன்பால்
மங்களஞ் சேர்ந்திடநுவலும் வண்பதிகம் திருப்புகழ்ப்பா.

அந்நகருக் கணித்தாகி யவிர்தென் பேற்றினில்விளங்கும்
பன்னகபூடணப் பரமன் பாற்கடலிற்றுயில்மால்மேல்
நன்னலமார்பதிகங்கள் நவின்றிருந்தான் அவற்றையெலாம்
தன்னதரும் பொருளாற்புத் தகமாகப் பதித்தானால்.

அத்தகையோன் முதற்கூறும் அணிப்புதுப்பாளையத் தவிர்வோன்
மெய்த்தரும சீலமுடன் விளங்குமுதாரக்குணத்தோன்
வைத்தலுங்கி வாணிபத்தின் வளமுடையான் உயர்தரும
கத்தனென இருந்தந்தக்கவின் கோவில்கலைப்புரப்போன்

சீரார்செங்குந்த குலச் சின்னசாமிப்பெரியோன்
நாரார்சேயெனத்தோன்றும் நற்பழனியாண்டியன்பன்
ஏராரும்கலைமகட்பேர் இசைகழகத்தினின் சார்பிற்
பாரார்போற்றிரண்டாண்டின் பயில்விழா வெளியீடாய்.

பலவாம் புத்தகவடிவிற் பதித்தன்பர்பாவலர்
இலகுமகிழ்வுறத்தருமிவ் வியற்பழனியாண்டியன்பன்
குலவரைதோறுடுமயிற் குமாரகுருபரனருளாற்
சலதியுடைப் புவிபுகழச்சந்ததமும்வாழியவே. சுபம்.

கௌமாரமடாலயம்,
திருவாமாத்தூர்.
விய ஆனி உ௯.

இங்ஙனம்,
தண்டபாணி சுவாமிகள் பௌத்திரர்,
தி. செ. முருகதாச பிள்ளை,

---

வேலுமயிலுந் துணை.

குருவே துணை.

## புதுப்பாளையம்

# முருகக்கடவுள் பதிகம்.

---

### காப்பு.

### வெண்பா.

*விதுப்பா ளையமெனப்பல் வெண்பணிலம் ஊரும்*
*புதுப்பா ளையத்தூர் புரப்பாய்—பொதுப்பான்மைச்*
*சற்குரவ ஞனபுகழ்ச் சண்முகனே உன்னைநம்பி*
*நிற்குமென்னைத் தள்ளாதே நீ.*

### வெண்டளைக்கலிப்பாக்கள்.

*ஆறு முகமும் அயிலணிதோள் ஆறிரண்டும்*
*வீறுமலர்த் தாளிரண்டும் வெற்பணைத்தும் கொள்வானூர்*
*தேறும் உணர்விற் சிறந்தோர் திருப்பணியில்*
*மாறுபடாத் தொண்டர் மருவுபுதுப் பாளையமே.* (க)

*மாலோன் மருகனென வாழ்த்துவார் தங்கள்முன்னும்*
*வேலோடு தோன்றியருள் வித்தகவேள் மேவியவூர்*
*சேலோடு நீலம் செழித்தபுனற் செய்வாம்பில்*
*வாலோதி மந்துயில்சீர் மன்னுபுதுப் பாளையமே.* (உ)

*கங்கை யிடைதோன்றிக் கார்த்திகைப்பெண் ணார்தமது*
*கொங்கை யருந்திவளர் கோமான் குலாவியவூர்*
*செங்கை வளையும் சிலம்பும் கலந்தொலிக்கும்*
*மங்கைநல்லார் ஆடல் மலிந்தபுதுப் பாளையமே.* (ங)

*கான மறமடந்தை காந்தள்மலர்க் கைத்தினைமாப்*
*போனகமாக் கொண்டுமகிழ் புண்ணியவேள் நண்ணியவூர்*
*தேனமர்பூஞ் சோலைமுதற் செப்புகின்ற சீர்பலவால்*
*வானவரூர் போன்றே வயங்குபுதுப் பாளையமே.* (ச)

*பொன்னகர்க்கோன் பெற்றமகள் பொற்புமுலைக் காசைகொண்டும்*
*கன்னல்வில்லாற் செற்றபிரான் கைதொழும்வாழ் வுள்ளானூர்*
*தென்னவனும் அஞ்சச் செகுப்பார் திரள்மிகலால்*
*மன்னர்பலர் வந்து வணங்குபுதுப் பாளையமே.* (ரு)

தஞ்சமென நம்பும் தமிழ்ப்புலவர் பாடலொடு
நெஞ்ச மகிழ்ந்தணியும் நீபத்தார்ச் சேய்வளரூர்
மஞ்சனைய கூந்தல் மடவார் முகம்போலும்
கஞ்சமலர் வாவி கவின்றபுதுப் பாளையமே. (௬)

தோகைச் சிகியைத் துவர்போலும் செந்தகரை
வாகைக் களிற்றை மகிழ்ந்தூரும் வானவனூர்
சாகைச் சதுமறையும் சங்கரன்சொல் ஆகமமும்
ஈகைச் சிறப்பும் இசைந்தபுதுப் பாளையமே. (௭)

பாயைப் புனையும் பறிதலையர் பாழாகத்
தீயைப் புனலைவெல்லும் செந்தமிழோன் சேர்தரும்ஊர்
வேயைப் பொரும்எழிற்றோள் மெல்லியலார் வேட்கையென்னும்
மாயைக்கும் அஞ்சாதார் மன்னுபுதுப் பாளையமே. (௮)

வீரம் பொலியும்வெற்றி வேலாயுதப்படையாற்
சூரன் றனைத்தடிந்த தோளுடைய வேளுறையூர்
கீரன் கவியும் கிளிபாடும் செந்தமிழும்
ஈரம் பெருக்க இலகுபுதுப் பாளையமே. (௯)

பங்கயத்தோன் மாயன் பரமேட்டி யென்னுமிவர்
தங்களுக்கோர் கோவாய்த் தழைத்தகுகன் தங்கியவூர்
சங்கம் உமிழ்ந்தமுத்தம் தாழையினும் வாழையினும்
செங்கரும்புச் சோலையினும் சேர்ந்தபுதுப் பாளையமே. (௰)

அங்கண்மா ஞாலத் தனைவருக்கும் தேசிகனும்
துங்க முருகோன் தொழும்பரே தோய்தரும்ஊர்
எங்களினம் போற்றும் *இராமசுவா மித்திருப்பேர்ப்
புங்கவனால் மேன்மை பொலிந்தபுதுப் பாளையமே. (௰௧)

போர்வேல் முருகன் புரந்தபுதுப் பாளையத்தைச்
சீர்வேய் வனத்துத் திருப்புகழோன் செப்புதமிழ்
கார்வேண்டும் நெஞ்சத்து நல்லவர்கள் எல்லவரும்
ஆர்வேய்ந்த சென்னி அரன்போல் அவிர்வாரே. (௰௨)

முற்றிற்று.

---

*அப்பதியில் வசித்த ஒரு பெரியார் - காய்சர் சுவாமியென வழங்குபவர்.

முருகக்கடவுள் துணை.

# திருப்புகழ்.

---

## காப்பு.

### வெண்பா.

பொருப்புடைய செவ்வேள் புதுப்பா ளையத்துத்
திருப்புகழ்ப்பாட் டோர்மூன்று செப்ப—மருப்புவலி
கொண்டுபகை வென்றுமகிழ் குஞ்சரத்தின் செஞ்சரணத்
தொண்டுநமக் குண்டே துணை.

தனனதனத் தானதத்தத்—தனதான

அருணைநகர்க் கோபுரத்திற்
கிளிபகர்சொற் பாடல்கற்றிட்
டவர்பெருமைப் பாடுரைக்கச்—சலியாதே

அணுகியிரப் போர்தமக்குத்
தவிடும்அளிக் கார்கள்முற்பட்
டளகைநகர்க் கோன்எனச்சொற்—றுழலாதே

தருணஅனப் பேடதொக்கத்
திகழ்மகளிர்க் கானபொற்புத்
தனமதனிற் சேரஇச்சித்—துருகாதே

தமநியவெற் பாமெனச்செப்
பிடுமயிலிற் றேவர்சுற்றத்
தவளநிறச் சேவல்பற்றித்—திகழ்வாயே

பொருவரும்உற் சாகம்உற்றுக்
கடல்நடுவிற் சூர்வதைத்துப்
புலவர்உவப் பாகவைத்திட்—டுயர்வேலா

புரைதவிர்சிற் கோலமுத்திக்
கரையில்விடத் தாரகத்துட்
பொருள்விரிவைப் பேசுமெய்ச்சற்—குருநாதா

தகும்வதனத் தாள்குறிச்சிப்
பரணருகிற் போயிரக்கைக்—குரியோனே
பனுவலியற் சீர்உணர்த்தித்
தரும்நலம்உற் றோர்கள்மெத்தப்
பழகுபுதுப் பாளையத்துப்—பெருமாளே. (க)

தனத்தான தானன—தனதான

சிலைக்கார்முகில் போலொளிர்
குழற்காரிகை யாரொடு
சிரித்தாடிநின் ஆடலை—மறவாதே
சிறைச்சாலையை நேர்சிறு
மனைக்கூடுழல் வாரொடு
திகைத்தாயுளை வீணினில்—ஒழியாதே
கனைத்தோர்மலை போல்வரு
பகட்டூர்நம னாது
கரத்தாயுத மானதை—நினையாதே
கணக்கேதும்இ லாதன(து)
எழுத்தாறும்வி டாதுசொல்
களிப்பாளர்க ளோடுற—அருள்வாயே
தினைக்கானக மூடுறும்
மறப்பேதைமுன் ஏகிய
சிறப்போதிடும் வேளையில்—மகிழ்வோனே
திதத்தாதிமி தோமென
நடிப்பார்வளை யாடிய
திருக்காதிடை ஓர்மொழி—பகர்வோனே
தனித்தான்நிகர் வேல்கொடு
திறற்சூர்முத லாமவர்
தலைச்சாடிய சேவகம்—உடையோனே
தமிழ்ப்பாவலர் கூடிய
புதுப்பாளைய மாநகர்
தனக்காதர மாகிய—பெருமாளே. (உ)

தானதனத் தானன தானன—தனதான

ஆறுநெறிக் காரரு மேவிட
வேறுநெறிப் பாதகர் கீழிட
ஆழியுடைப் பார்மகள் ஆர்வம—துயராதோ

ஆரணவித் தாகிய வேதியர்
காரணசத் தாகிய மாதவர்
ஆதியரைத் தேவரில் மேலெனல்—நிலையாதோ

நீறுகொடுத் தோர்கள வூடுமுன்
ஓதியசொற் கேகளி கூருமென்
நேயமதிற் றேணிய வாறுகன்—எதிரேநீ

நீலமயிற் றேகையின் நீழலில்
ஓரிருபொற் பாவைய ரோடயில்
நீடியகைச் சீரொடு நாடொறும்—வருவாயே

நாறுமலர்ப் பீடமு ளானுடல்
சோகமுறத் தேவர்கள் வாய்விட
நாலுதலைக் கூடுமுன் மோதிய—புலவோனே

நாகரிகத் தாள்கவு மாரியென்
ஆருயிரைப் போல்பவள் பார்வதி
ஞானவிளக் கானவள் பால்நுகர்—புதல்வோனே

தேறுதமிழ்ப் பாவலர் வாழ்வுற
ஊமையெனப் போய்விளை யாடிய
சிலம்பிணைப் பார்பகை வேறற—முனிவோனே

சேவலணிக் கேதன மேசெயம்
ஆகுமெனக் கூவிடு வார்மலி
சீர்கொள்புதுப் பாளைய மேவிய—பெருமாளே. (௰)

## வெண்பா.

என்றுநம்மை ஆள்சேய் இலங்குபுதுப் பாளையத்து
மூன்று திருப்புகழும் முன்னினால்—வான்றுதிக்கும்
மண்ணுலகம் போற்றிசைக்கும் மாசுணங்கள் வாழ்பிலமும்
எண்ணுநலம் உண்டாமெய் யே.

---

முற்றிற்று.

வேலுமயிலுந் துணை.

சிவமயம்.

# தென்பேறு
# சிவன் பதிகம்.

---

## காப்பு.

### வெண்பா.

செல்வம் பெருகித் திகழ்கின்ற தென்பேற்றில்
வில்வம் புனைந்துறையும் வேதியனே—நல்வரங்கள்
எல்லவர்க்கும் ஈந்தருளும் ஈசனே என்னையும்நீ
வல்லவர் தம் மோடிருக்க வை.

### அறுசீர்த்தாழிசை.

இந்துல வுஞ்சடை யுங்குழை யாவனை யிலகும் திருக்காதும்
வெந்துகு ளிர்ந்தெரிந் துள்ளமுக் கண்மூதல் வியனும் கருதேனே
பைந்துண ருந்தழை யுஞ்சொரி வார்பிழை பாராதருள் வோனே
செந்துவர் வாயுமை பங்கின னேயெழிற் றென்பே றுடையானே. க.

கார்மரு வுங்குழ லார்விழி யென்றுள கணையால் வெருள்வேனுன்
பேர்மலி விற்சிறி தோதிடு மெய்ப்புகழ் பெறும்நாள் உதியாதோ
பார்மகள் கேள்வன் வணங்கிடக் கண்டருள் பாலித்திடு வோனே
சீர்மலர் வாவிமி கும்பொழில் சூழ்தரு தென்பே றுடையானே. உ.

முத்தமி ழிற்கவி பாடிய ணிந்துனை முன்னுள் வழிபட்டோர்
அத்தனை பேறுபெ றத்தமி யேன்இவண் அலமந் திடலாமோ
மத்தம் எருக்கறு கம்புலி யாதிய மருவுஞ் சடையோனே
சித்தர் தமக்கா சானவ னேஅருள் தென்பே றுடையானே. ங.

காயக நெஞ்சமு டைக்கொடி யோர்மனைக் கடைவா யில்கள் தோறும்
போயலை யாதுனை நின்னடி யாரொடு புகழுந் தவம்நல்காய்
ஏயவெ ரைந்தெழுத் தும்பகர் வார்களை யென்றும் பிரியாதாய்
செம்வெ ருக்கொள வென்றுயர் வாய்திருத் தென்பே றுடையானே ச.

கூறரி தாகிய நின்புக ழேபகர் கொள்கைக் குரியார்தம்
பேறடை யக்கரு துந்தமி யேனொடு பேசா விதம்யாதோ
ஆறணி புஞ்சடை யாரமு தேபுலி யதளா டரை யோனே
சீறர வப்பணி கொண்டவ னேபெருந் தென்பே றுடையானே. ரு.

பொய்வழி யிற்செல விட்டெனை நாடொறும் புண்ணு கிடவாட்டும்
ஐவர் தமக்கினி யாவணம் நின்திரு அருளா ழியில்ஆழ்த்தாய்
மைவரு சோலையும் வாவியும் சூழ்தர வளையைக் கயல்பாயும்
செய்வரம் பிற்றினம் ஓதிமம் கண்டுயில் தென்பே றுடையானே. சு.

பூவெழு தும்சிறு கோடுறு மால்விடைப் புனிதன் பரம்என்னும்
பாவெழு தும்பெரி யோரொடு நான்மிகப் பழகப் பெறுவேனோ
கோவெழு தும்தனத் தார்மய லில்லவர் கோவே மலர்கொள்ளும்
தேவெழு தும்சது மாமறை யோலிடும் தென்பே றுடையானே. எ.

ஓர்விழி யுள்ளவர் அன்னவர் சொல்மொழி ஒப்பா வுணர்வுற்றும்
பார்விலை யாமொழி மங்கையர் தம்மயல் படரச் செயலாமோ
போர்விடை யூர்பவ னேசிவ னேநெடும் பொன்வில் லணிகையாய்
தேர்விசை யற்கருள் செய்தவ னேஅணித் தென்பே றுடையானே.
அ.

பொன்னை நிகர்த்த புகர்க்களி றேடயில் புனைவே ளெனும்மைந்தர்
என்னை யணைத்தெமக் கோர்துணை நீயென யானும் பெறுவேனோ
புன்னை மலர்த்தொடை யான்மக ளால்வலை புனையும் புயம்உற்றுய்
தென்னை யெனப்பல வாழைகள் நீடிய தென்பே றுடையானே. கூ.

சாரண ரைக்கழு விட்டவன் ஆதிய சதுரர்க் கருள்செய்த
காரணம் நாடி வருந்திடு மென்னது கலியும் புனைவாயோ
பூரண னேஅருட் புண்ணிய னேமிகப் பொலிவெண் பொடி
போர்த்தாய்
சீரண மில்லவ னேஅர னேயுயர் தென்பே றுடையானே. ௰.

வெண்ணிறச் செங்கண் விடைக்கொடி யாளனை மிளிர்கொன்
றையும்நீறும்
தண்ணில வும்சடை யிற்புனைந் தாடிய தலைவன் றனைநாளும்
திண்ணியர் மேயதென் பேறுடை யீசனைத் திருநெல் லையில்
வந்தோன்
நண்ணிய இப்பதி கம்பகர் வாரெதிர் நமனார் அணுகாரே. ௰க.

முற்றிற்று.

ஸ்ரீமந்நாராயணாய நம:

# தென்பேறு

# விஷ்ணு பதிகம்.

---

## காப்பு.

### வெண்பா.

காதலித்து மார்பிற் கமலமல ராளைவைத்த
மாதவனே தென்பேற்று மாநகரில்—நீதம்
செலுத்துகின்ற சங்காழிச் செங்கைநெடு மாலே
அலுத்தவந்தேன் ஆட்கொண் டருள்.

### கொச்சகக் கலிப்பாக்கள்.

ஐயமின்றி நின்னடியார்க் கடிமைசெய்யும் அவர்பணியே
மெய்யருட்சீர் நல்குமென விரும்புவதும் அறியாயோ
பையரவிற் றுயில்கூரும் பச்சைமுகில் அனையானே
செய்யவளுக் கினியோனே தென்பேற்று நெடுமாலே. க.

மூவகைய திருநாமம் முழுதுமிட்டுன் முன்னின்றென்
ஆவலெல்லாம் சொலக்கேட்டும் அருள்புரியா விதம்யாதோ
காவலர்தங் குணங்கோது கண்டிருக்கும் கார்முகிலே
தேவர்களுக் குயிரனையாய் தென்பேற்று நெடுமாலே. உ.

கந்தரம்போல் மிகநல்கிக் களிகூரும் புகழ்வேண்டி
வந்தெனக் கிரங்காத வன்மையுனக் குளதாமோ
மந்தரத்தைக் கடலிலிட்டு மதித்துவிண்ணோர் வாழவைத்தாய்
செந்தமிழ்ப்பின் சென்றுவந்தாய் தென்பேற்று நெடுமாலே. ௩.

எல்லவர்க்கும் ஆதாரமாய் இலங்காழிப் படையேந்தும்
வல்லவனைப் பரவாதார் மாட்டுமிரந் துழல்வேனோ
நல்லவராம் ஐவரன்று ஞாயமிலார் பாலிரக்கச்
செல்லவிடு தூதானாய் தென்பேற்று நெடுமாலே. ச.

காலையினும் மாலையினும் கருநீல மலைநேருன்
மேலைநினைந் துருகார்போல் வெதும்பளனை விடலாமோ
பாலைநிகர் மொழிகுளறிப் பதறியழு(து) அழைத்தாட்குச்
சேலைமிகக் கொடுத்தோனே தென்பேற்று நெடுமாலே. ரு.

மொய்த்தமலர் பலதூவி முகுந்தாஎன் றிறைஞ்சும்அவர்
பித்தனெனத் தமியேனைப் பேசாத பேரருள்வாய்
கைத்தலம்எட் டுடையதொரு காண்முளையை யீன்றபின்பு
சித்தசனைப் பெற்றோனே தென்பேற்று நெடுமாலே. ௬.

பாலோங்கு மொழிநல்லார் பரிசுகண்டுள் [illegible]ஞ்சாது
மாலோங்கப் பெறுவேனும் மகிழ்கூரப் புரிவாயோ
வேலோங்கும் பாகாலன் வெருட்டவிற்போய் வெருளுற்றாய்
சேலோங்கும் வயல்சூழும் தென்பேற்று நெடுமாலே. ௭.

கவலையெனும் பிணிகொண்டுன் கண்ணருளை மிகநாடித்
தவமுயலும் தமியேனைத் தளரவிடத் தகுங்கொல்லோ
அவன்இவன்என் றுரையாமல் ஆதியெனும் ஆனையின்முன்
சிவன்அயன்கண்(டு)ஒல்கவந்தாய் தென்பேற்று நெடுமாலே. ௮

செங்கனக வரைபோலும் திறற்கலுழன் மிசைதோன்றிப்
பங்கயத்தோன் முதலாய பாகவத ருடன்வைத்தாள்
வெங்கண்ண னும்தகுவன் விறலழியத் தூணைவிட்டோர்
சிங்கமெனக் குதித்தோனே தென்பேற்று நெடுமாலே. ௯.

உறங்காத புளிநீழல் உடையானோ டுள்ளவர்போற்
பிறங்கார்வம் பெறவேண்டும் பெருமைபெற்றும் பிழைப்பட்டேன்
கறங்காழிப் பெருமானே கனற்கோபத் தகுவரிடம்
திறங்காட்டும் புயத்தானே தென்பேற்று நெடுமாலே. ௰.

தேனமரு மலர்ச்சோலைத் தென்பேற்று நெடுமாலை
வானவரும் புகழ்வேணு வனத்தொருவன் பகர்பாடல்
ஆனபத்தும் மறவாமே அநுதினமும் பகர்வாரை
ஈனமுறும் வினைப்பேயின் இகல்சிறிதும் அணுகாதே. ௰௧.

முற்றிற்று.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்.

---

# தனிக்கவிகள்.

---

பூசைக்கு வைத்திருந்த பூவைக் கொழுந்தையெடுத்(து)
ஆசை யுடன்முடித்[illegible]ல்லாமல்—வாசத்
தயிர்திருடி யுண்டோ[illegible]ன் றனையுநாம் கண்டோம்
இயல்கொள்புதுப் பாளையத்தி லே.

எதுப்பா ளையத்தோரை யீடழிக்குஞ் செவ்வேள்
புதுப்பா ளையத்துப் பொடியை—மதுப்பூந்தார்
தேவர்களும் சித்தர்களுஞ் செஞ்சடையா னுகியராம்
மூவர்களுங் கொள்வார் முகந்து.

பாசாங்கி லாதபல பத்தர்பணி யும்புதுப்
பாளையந் தன்னில் வாழும்
பஞ்சவர்க் கொருமணி யானபாஞ் சாலியே
பகர்வசனம் ஒன்று கேளாய்
ஆசார வீனமுத் தானுரா வுத்தன்முத
லானசில பேய்க ளுக்கா
ஆடுகோ ழிகளறுத் துப்படைத் துண்பன்அவன்
ஆசியம் விளைவிக்கு மூடப்
பூசாரி யென்னைநித மும்நிந்தை செய்வதாப்
போதவுங் கேள்வி யானேன்
புத்தியவ னுக்குக் கொடுத்துநல் லோர்களைப்
புகழும் படிக்கு வைப்பாய்
காசாவின் மலரனைய கண்ணனறி வானிதைக்
கற்புவலி யாலுயர்ந்த
கன்னியென் றுல்நீயும் அறிகுவாய் வேல்கொண்ட
கந்தவே ளடிமை யானே.

---

இம்மூன்று கவிகளும் சுவாமிகள் ஆங்குச் சென்றிருந்த சமயம் நேர்ந்த சந்தர்ப்பத்தை நோக்கிக் கூறப்பெற்ற தனிக்கவிகளாம்.

